ணர்வதாம். (உ-ம்)

| | | |
|---|---|---|
| மரம்வெட்டினான் | மரத்தைவெட்டினான் | வேற்றுமை |
| கல்லெறிந்தான் | கல்லாலெறிந்தான் | |
| கொற்றன்மகன் | கொற்றனுக்குமகன் | |
| மலைவீழருவி | மலையின் வீழருவி | |
| சாத்தன்கை | சாத்தனதுகை | |
| மலைநெல் | மலையின்கணெல் | |

௨௪௰. அல்வழிப் புணர்ச்சியாவது வேற்றுமையல்லாத வழியிற்புணர்வதாம்.

௨௪௧. அது வினைத்தொகையும், பண்புத்தொகையும், உவமைத்தொகையும், உம்மைத்தொகையும், அன்மொழித்தொகையும் என்னும் ஐந்து தொகைநிலைத்தொடரும், எழுவாய்த்தொடரும், விளித்தொடரும், வினைமுற்றுத்தொடரும், பெயரெச்சத்தொடரும், வினையெச்சத்தொடரும், இடைச்சொற்றொடரும், உரிச்சொற்றொடரும் என்னும் ஏழுதொகாநிலைத்தொடருமாகப் பன்னிரண்டுவகைப்படும்.

| | |
|---|---|
| கொல்யானை<br>ஓடுபாம்பு | வினைத்தொகை |
| கருங்குதிரை<br>செந்தாமரை | பண்புத்தொகை. |

| | |
|---|---|
| சாரைப்பாம்பு<br>ஆயன்சாத்தன் | இருபெயரொட்டுப்பண்புத்தொகை |
| பவளவாய்<br>மதிமுகம் | உவமைத்தொகை |
| இராப்பகல்<br>உடலுயிர் | உம்மைத்தொகை |
| பொற்றொடி<br>தாழ்குழல் | அன்மொழித்தொகை. |
| சாத்தன்வந்தான்<br>மரம்வளர்ந்தது | எழுவாய்த்தொடர் |
| சாத்தாவா<br>பொற்றுகொள் | விளித்தொடர். |
| வந்தான்சாத்தன்<br>வளர்ந்ததுமரம் | வினைமுற்றுத்தொடர் |
| வந்தசாத்தன்<br>வருகின்றபுலி | பெயரெச்சத்தொடர் |
| வந்துபோனான்<br>வரசசொன்னான் | வினையெச்சத்தொடர் |
| மற்றொன்று<br>இனிச்செய்வேன் | இடைச்சொற்றொடர். |

நனிபேதை } உரிச்சொற்றொடர்
கடிக்கமலம் } எனவரும்.

பொன்னனவன் எனவருங் குறிப்பு வினைமுற்று வினைமுற்றுத்தொடரிலும், கரியகுதிரை எனவருங் குறிப்புப்பெயரெச்சம் பெயரெச்சத்தொடரிலும், நாளன்றிப் போகான் எனவருங் குறிப்புவினையெச்சம் வினையெச்சத் தொடரிலும் அடங்குமெனக்கொள்க.

அன்றியும் பாம்பு பாம்பு என வொருசொல்லடுக்கி வருதல் முதலாக வேற்றுமையொழிய வாராதனவெல்லாம் அல்வழியாமெனவுணர்க.

௨௪௨. இப்படி மொழிகள் வேற்றுமையிலும் அல்வழியிலும் புணருமிடத்து இயல்பாகவாவது விகாரமாகவாவது புணரும்.

௨௪௩. இயல்புப் புணர்ச்சியாவது நிலைமொழியும் வருமொழியும் விகாரமின்றிப் புணர்வதாம். (உ-ம்)

பொன்மணி சாத்தன்கை எனவரும்.

௨௪௪. சொற்புணர்ச்சியாவது நிலைமொழியேனும், வருமொழியேனும், இவ்விருமொழியுமேனும், தோன்றல் திரிதல் கெடுதல் என்னும் விகாரங்களுள் ஒன்றையாவது பலவற்றையாவது பெற்றுப்புணர்வதாம். (உ-ம்),

வாழைப்பழம் தோன்றல்,
மட்குடம், திரிதல்,
மரவேர். கெடுதல்.
நிலப்பனை. கெடுதல், தோன்றல்,
பனங்காய். கெடுதல், தோன்றல், திரிதல், } விகாரம்.

௨௪௫. இ, ஈ, ஐ, இம்மூன்றுயிரீற்றின்முன்னும் உயிர்முதன்மொழிவரின் இடையில் யகரவுடம்படுமெய்வரும் (உ-ம்).

கிளி- அழகு, கிளியழகு
தீ- அழகு, தீயழகு
கை- அழகு, கையழகு } எனவரும்.

௨௪௬. அ, ஆ, உ, ஊ, ஒ, ஓ, ஔ இவ்வேழுயிரீற்றின்முன்னும் உயிர்முதன்மொழிவரின் இடையில் வகரவுடம்படுமெய்வரும். (உ-ம்)

| | | | |
|---|---|---|---|
| பல- | அணி, | பலவணி. | என வரும். |
| பலா- | இலை, | பலாவிலை. | |
| திரு- | அடி, | திருவடி. | |
| பூ- | அரும்பு, | பூவரும்பு. | |
| நொ- | அழகா, | நொவ்வழகா. | |
| கோ- | அழகு, | கோவழகு. | |
| கௌ- | அழகு, | கௌவழகு. | |

௨௪௭. ஏகார வுயிரீற்றின்முன் உயிர் முதன் மொழிவரின் இடையில் யகரமாவது வகரமாவது உடம்படுமெய்யாகவரும்.

(உ-ம்)

| | | | |
|---|---|---|---|
| அவனே- | அடித்தான், | அவனேயடித்தான், | என வரும். |
| சே- | உழுதது, | சேவுழுதது. | |

௨௪௮. குற்றியலுகர வீற்றின்முன் உயிர்முதன் மொழிவந்தால் அவ்வுகரங் கெடும். உகரங்கெட நின்ற மெய்யின்மேல் வந்தவுயிரேறும். (உ-ம்)

| | | | |
|---|---|---|---|
| ஆடு- | அரிது, | ஆடரிது. | என வரும். |
| அஃது- | இல்லை, | அஃதில்லை. | |
| வரகு- | அரிது, | வரகரிது. | |
| கொக்கு- | ஒடிற்று, | கொக்கொடிற்று. | |
| குரங்கு- | ஏறிற்று, | குரங்கேறிற்று. | |
| தெங்கு- | அழகிது, | தெங்கழகிது. | |

௨௪௬. வேற்றுமைப்பொருளில் உயிரீற்றுமரப்பெயர்முன் வல்லெழுத்துவந்தாற் சிலவற்றின்முன் வந்தவல்லெழுத்தும், சிலவற்றின்முன் அவ்வவ்வெழுத்திற்கினமாகிய மெல்லெழுத்தும், சிலவற்றின்முன் அம்முச்சாரியையுந் தோன்றும்.

(உ-ம்.)

| | |
|---|---|
| பலாக்காய்<br>ஆத்திச்செதிள்<br>இலந்தைத்துளிர்<br>கொன்றைப்பூ | வல்லெழுத்துத் தோன்றின. |
| விளங்காய்<br>காயாஞ்செதிள்<br>மாந்துளிர்<br>களம்பழம் | மெல்லெழுத்துத் தோன்றின. |
| புளிங்காய்<br>அனையஞ்செதிள்<br>கடம்பந்துளிர்<br>வேப்பம்பழம் | அம்முச்சாரியை தோன்றிற்று |

ஆச்சியும் ஐகாரவீற்றுமரப்பெய

ர்களுட்சில பனங்காய், மாதளம்பழம் என ஐகாரங்கெட்டு அம்முச்சாரியைபெற்றும் வரும்.

இம்மரப்பெயர்களின்முன் அந்நெறி யில்வரும் வல்லினமும், இருவழியிலும் வருமெல்லினமும், இடையினமும், அவ்வவ் விற்கு கூறுமிடத்துக் கூறப்படும்விதிகளை ப்பெறும்.

௨௫௰ மூன்று சுட்டிடைச் சொன் மூன்றும், எ என்னும் வினாவிடைச்சொன் மூன்றும், யகரமொழிந்த மெய்கள்வரின் வந்தவெழுத்தாமிகும்.

(உ-ம்.)

| | | |
|---|---|---|
| அக்கொற்றன் | இக்கொற்றன் | [illegible] |
| உக்கொற்றன் | எக்கொற்றன் | |
| அந்நாள் | இந்நாள் | |
| உந்நாள் | எந்நாள் | |
| அவ்வாழ்வு | இவ்வாழ்வு | |
| உவ்வாழ்வு | எவ்வாழ்வு | |

௨௫௧. இவைகளின்முன் யகரம்

உயிரும் வந்தால் இடையில் வகரந் தோன்றும். (உ-ம்)

| | | |
|---|---|---|
| அவ்யானை | இவ்யானை | எனவரும். |
| உவ்யானை | எவ்யானை | |
| அவ்வுயிர் | இவ்வுயிர் | |
| உவ்வுயிர் | எவ்வுயிர் | |

௨௫௨. அந்த, இந்த, எந்த என மருவு மொழிகளாய் வருஞ் சுட்டுவினாக்களின் முன் வரு வல்லினமிகும்; வரு மெல்லினமும் இடையினமும் இயல்பாம். (உ-ம்)

| | | | |
|---|---|---|---|
| அந்தக்கல் | இந்தக்கல் | எந்தக்கல் | எனவரும். |
| அந்தமலை | இந்தமலை | எந்தமலை | |
| அந்தயானை | இந்தயானை | எந்தயானை | |

[அகரவீறு]

௨௫௩. அகரவீற்றுப் பெயர்ச்சொன் முன்வரும் வல்லெழுத்து இருவழியினு மிகும். (உ-ம்)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| விளக்குறிது | விளக்குறுமை | என |
| அதச்சிறிது | அதச்சிறுமை | வரும் |

உருச. அகரவீற்றுச் செயவென்று ம் வினையெச்சத்தின் முன்னும், இடைச் சொன்முன்னும், உரிச்சொன் முன்னும், வரும் வல்லினமிகும். (உ-ம்)

உண்ணக்கொண்டான் } வினையெச்சம்.
டவிபோலப்பாய்ந்தான் }
போன்னெனப்புறம்வோர் - இடைச்சொல்,
தவப்பெரியன் - உரிச்சொல்.

எனவரும்.

உருரு. அகரவீற்றுப் பெயரெச்சத்தின்முன்னும், வியங்கோள் வினைமுற்றின் முன்னும், அஃறிணைப் பன்மை வினைமுற்றின்முன்னும், எவல்வினை முற்றில் முன்னும், ஆறும்வேற்றுமையின் அகரவுருபின்முன்னும், அம்மவென்னும் இடைசசொன்முன்னும் வரும் வல்லினம் இயல்பாம் (உ-ம்)

உண்ட குதிரை }
உண்கின்ற செந்நாய் } பெயரெச்சம்
உண்ணுதகர் }

வாழ்கதொற்று } வியங்கோள்
வாழியசாத்தா } வினைமுற்று.

உண்டனகுதிரைகள்
உண்கின்றனசெந்நாய்கள்
உண்பனதகர்கள்
உண்ணாதனபன்றிகள் } அஃறிணைப் பன்மை வினைமுற்று

நடகொற்றா
கடசாத்தா } ஏவல்வினைமுற்று.

தனகைகள் — அகரவுருபு.

அம்மகொற்றா,
அம்மசாத்தா } அம்மவென்னு மிடைச்சொல்.

எனவரும்.

அன்றியும் - உண்ணியகொண்டான் உண்ணியசென்றான் எனச்செய்யுளிலே வருஞ்செய்யியவென்னும் வாய்பாட்டுவினையெச்சத்தின்முன் வரும்வல்லினம் இயல்பாமெனவும், வாழியசாத்தா என்பது வாழிசாத்தா என வீறுகெட்டுமெனவும், கெட்டவிடத்துவரும் வல்லினம் இயல்பாமெனவும் அறிக.

௨௫௯. மேற்கூறிய அகரவீற்றுச்சொற்களின் முன் வருமெல்லினமும் இடையினமும் இருவழியிலும் இயல்பாம்.

(உ-ம்)

அல்வழி. வேற்றுமை.

விளா நீண்டது விளநீட்சி } ஈ-ம்

அதவவிது அதவவிமை },

உண்ணடமாணடது }
உண்டமான் } ஈ-ம், வரும்.
உண்டணவானரங்கள் }

மற்றவைகளுமிப்படியே.

௨௫௭. பல சில என்னும் அகரவீற்றுச் சொற்கள் தம்முன்னர்த் தாம்வரின் வரு மொழி முதலெழுத்து இயல்பாகியும், மிக்கும், நிலமொழி ஈறுகெட்டும், நில மொழியீற்று அகரங்கெட லகரம் றகர மாய்த் திரிந்தும் பிரியாமலும் வரும். (உ-ம்).

பலபல சிலசில }
பலப்பல சிலச்சில }
பல்லபல சில்லசில } ஈ-ம்.
பற்பல சிற்சில }
பல்பல சில்சில }

அன்றியும் இவ்விருமொழிகளின் முன் பிறசொற்கள்வரின் பலகலை பஃகலை சிலசேனை சில்சேனை பலமலை பன்மலை சில மலை சின்மலை பலயானை பல்யானை சில்யா

சாத்தனுகொண்டான் } எ-ம்,
கொற்றனுசென்றான் }

உண்ணாக்குதிரைகள் }
ஓடாச்செந்நாய்கள் } எ-ம்,
நடவாதகரிகள் }
செப்பாப்பக்ஷிகள் }

நாகொற்றா } எ-ம்,
வாசாத்தா }

கேண்மியாகொற்றா } எ-ம்,
சென்மியாசாத்தா } வரும்.

அன்றியும் உண்ணாக்கொற்றன் என ஈறுகெட்டபெயரெச்சத்தின்முன்னும், உண்ணாப்போயினன் என ஈறுகெட்ட வினையெச்சத்தின்முன்னும் வரும் வல்லினமிகுமெனக்கொள்க.

௨௬௰. மேற்கூறிய ஆகாரவீற்றுச் சொற்களின்முன் வரும் மெய்யினமும், இடையினமும் இருவழியினுமியல்பாம்.

(உ-ம்)

தாராஞான்றது - தாராஞாற்சி } அ-
மூங்காவலிது - மூங்காவன்மை } டு.

ஆ நீண்டது - ஆ நீட்சி } எ-ம்.
ஆயாது - ஆயாப்பு }
யா நீண்டன } எ-ம்.
யா வலியன }
கொற்றா நடந்தான் } எ-ம்.
கொற்றா வந்தான் }
உண்ணா நாகங்கள் } எ-ம்.
நடவா யானைகள் }
சா நாகா } எ-ம்.
வா வளவா }
கேண்மியா நாகா எ-ம், வரும்.

சுறவுக்கோடு - புறவுச்சிறை எனக்குற்றெழுத்தின் பின்னின்ற ஆகாரங்குறுகி உகரச்சாரியை பெறுமெனவும் உகரச்சாரியையைபெற்றவிடத்துவரும்வல்லினமிகுமெனவுங்கொள்க.

[இகரவீறு.]

உ௱௧. இகர வீற்று மொழிகளின் முன்வரும் வல்லினம் அல்வழியில் எழுவாய்த்தொடரிலும், வினைமுற்றுத் தொடரிலும், உம்மைத் தொகையிலும், இயல்பாம். இருபெயரொட்டுப் பண்புத் தொகையிலும், உவமைத்தொகையிலும், செய்தெ

ன்னும் வாய்பாட்டு வினையெச்சத்தொடரி லும், குறிப்புவினையெச்சத் தொடரிலும், இடைச்சொற் றொடரிலும், உரிச்சொற் றொடரிலும், இருபான்மை பிறதொடரி லு மிகும்.

பருத்திகுறிது
கொடிசிறிது } எழுவாய்த்தொடர்

உண்டுசாத்தா
உண்ணுதிகொற்றா } முன்னிலைவினைமுற்று.

எறிசாத்தா
படிகொற்றா } ஏவல்வினைமுற்று.

பரணிஆர்த்திரை
வெள்ளிசனி } உம்மைத்தொகை.

வரும்வல்லின மியல்பாயின.

மாசித்திங்கள்
அலிக்கொற்றன் } பண்புத்தொகை.

காவிக்கண் உவமைத்தொகை

தேடிக்கொண்டான்
ஓடிப்போனான் } செய்தெனும் வினையெச்சம்.

நாளன்றிச்செய்தான்
நாளின்றிப்போனான் } குறிப்பு வினையெச்சம்.

இனிச்செய்வேன், இடைச்சொல்.
கடிக்கமலம் உரிச்சொல்.

வரும்வல்லினமிக்கன.

உகூஉ. இகரவீற்றுமொழிகளின்முன் வேற்றுமையில்வரும் வல்லினமிகும்

(உ-ம்)

கரிக்கோடு கிளிச்சிறகு
நரித்தலை பருத்திப்பூ } எனவரும்
மாசித்திருவிழா காவித்தடம்

வரும்வல்லினம் வரிகட்டினான் என இரண்டனுருபுதொக வருமிடத்து இயல்பாமெனவும், வரிகுலா குழலிசை எனச் சிறுபான்மை அஃறிணைப்பெயரிடத்துவேற்றுமையில் இயல்பாமெனவுங்கொள்க.

சுவையை யுணர்த்தும் புளி என்பதன்முன் புளிக்கறி புளிங்கறி எனவரும் வல்லெழுத்தாயது அதற்கினமாகிய மெல்லெழுத்தாவது மிக்குவருமென்றறிக.

உகூக. மேற்கூறிய இகரவீற்றுமொழிகளின்முன் மெல்லினமும் இடையினமும்வரின் அவை இருவழியிலுமியல்பாம்

(உ-ம்)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| பருத்திநீண்டது | பருத்திநீட்சி | [illegible] |
| கொடிவலிது | கொடிவன்மை | |
| தேடிநின்றான் | —————— | |
| ஓடிவந்தான் | —————— | |

மற்றவைகளு மிப்படியே.

[ஈகாரவீறு.]

௨௯௪. ஈகாரவீற்றுப்பெயர்ச்சொன்முன் இருவழியிலும் வரும் வல்லினம் மிகும். (உ-ம்)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| ஈக்குறிது | ஈக்குறுமை | [illegible] |
| தீச்சிறிது | தீச்சிறுமை | |
| வீப்பெரிது | வீப்பெருமை | |

வரும்வல்லினம் அல்வழியில் பீகுறிது நீகுறியை எனப் பீ நீ என்னும்பெயர்களின்முன் இயல்பாகவும், கொற்றா, சீ சாத்தா என ஈகாரவீற்றேவல்வினை முற்றின்முன் இயல்பாகவும், மீ என்பதன்முன் மீ

கண் என இடமல்லாதலன்றி மிக்கூற்று, மீக்கோள், என வருமெழுத்தும் மீந்தோய் என மெல்லெழுத்து மிகவும்பெறுமெனவறிக.

௨௬௫. மேற்கூறிய ஈகார வீற்று மொழிகளின்முன் இருவழியினு மெல்லினமும் இடையினமும் வரின் அவை இயல்பாம்.

(உ-ம்)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| ஈநீண்டது | ஈநீட்சி | எனவரும். |
| ஈவலிது | ஈவன்மை | |

[முற்றியலுகர வீறு]

௨௬௬. உகர முற்றியலுகர வீற்றுப்பெயர், களின்முன் இருவழியினும் வரும் வல்லினம் மிகும்.

(உ-ம்)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| வயக்கடிது | வயக்கடுமை | எனவரும். |
| மழுச்சிறிது | மழுச்சிறுமை | |
| பசுத்தீது, | பசுத்தீமை | |
| திருப்பெரிது | திருப்பெருமை | |

௨௫௭. அது இது உது என்னுஞ் சுட்டுப்பெயர் முன்னும் எது என்னும் வினாப்பெயர் முன்னும், ஒரு இரு அறு எழு என்னும், விகாரப்பட்டுவரும் எண்ணுப்பெயர் முன்னும், ஏவல்வினைமுற்றின் முன்னும், ஒடு என்னு மூன்றனுருபின் முன்னும், அது என்னும் ஆறனுருபின் முன்னும்வரும் வல்லினம் இயல்பாம்.

(உ-ம்)

| அல்வழி: | வேற்றுமை. | |
|---|---|---|
| அதுகுறிது | அதுகண்டான் | இயல்பு. |
| இதுசிறிது | இதுசெகுத்தான் | |
| உதுபெரிது | உதுதந்தான் | |
| எதுசிறிது. | எதுபெற்றான். | |
| ஒருகை | அவனொடுசென்றான் | |
| இருசேனை | அவனதுகை. | |
| அறுதானை. | ——— | |
| எழுபுவி | ——— | |
| கொய்சாத்தா. | ——— | |
| எய்கொற்றா | ——— | |

௨௫௮. மேற்கூறிய முற்றியலுகர வீற்றுமொழிகளின்முன் உயிர்வரின் அவ்-

உயிர்பொதுவிதியால் இருவழியிலும் வந்த வகரவுடம்படுமெய்யோடியைவதன்றிச் சிறுபான்மை நிலைமொழியீற்று உகரங்கெட. அவ்வுகரங்கெட்டுநின்றமெய்யோடியையவும். மெல்லினமும் இடையினமும்வரின் அவை இருவழியிலு மியல்பாம்.

(உ-ம்.)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| பசுவழகிது. | பசுவழகு. | எ-ம், |
| கதவழகிது. | கதவழகு | எ-ம், |
| வரவரிது. | வரவருமை | |
| வடுநீண்டது. | வடுநீட்சி | எ-ம், வரும். |
| பசுவலிது. | பசுவன்மை | |

மற்றவைகளுமிப்படியே.

[குற்றியலுகரவீறு.]

௨௪௧. வன்றொடர் குற்றியலுகரவீற்று மொழிகளின்முன் வரும் வல்லினம் இருவழியிலுமிகும். (உ-ம்)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| கொக்குக்கடிது. | கொக்குக்கடுமை | எ-ம் |
| கச்சுச்சிறிது. | கச்சுச்சிறுமை | வரும். |

படுத்துச் சென்றான், கற்றுப்பேசி

றன் என வினைச்சொன்முன் அல்வழியி
லேமிகுவன.

உ௭௰. மென்றொடர் குற்றிய லுகர
வீற்று மொழிகளின்முன் வரும் வல்லின
ம் அல்வழியிலியல்பாம். வேற்றுமையிலே
மிகும். (உ-ம்)

அல்வழி. வேற்றுமை

குரங்குகடிது குரங்குக்கால் } எனவரும்.
அம்புதீது அம்புத்தலை }

அறிந்துகொண்டான், நடந்துசென்
றான் என வினைச்சொன்முன் அல்வழியி
லியல்பாயின.

உ௭௧. நெடிற்றொடர், ஆய்தத்தொ
டர், உயிர்த்தொடர், இடைத்தொடர் என்
னும் இந்நான்கு தொடர் குற்றியலுகரவீ
ற்று மொழிகளின்முன் வரும் வல்லினம்
இருவழியினு மியல்பாம். (உ-ம்)

அல்வழி. வேற்றுமை.

நாகுகடிது நாகுகடுமை } எனவரும்.
எஃகுதீது எஃகுதீமை }
வரகுசிறிது வரகுசிறுமை }
தெள்குபெரிது தெள்குபெருமை }

சுகுகால், அஃகுபிணி, பொருதுசெ

ன்றான், எய்துகொன்றான் எனவினைச்சொ
ன்முன் அல்வழியி லியல்பாயின.

௨௭௨. மேற்கூறிய வறுவகைக்குற்றிய லுகரவீற்றுமொழிகளின்முன் வருமெல்லினமும் இடையினமும் இருவழியிலுமியல்பாம். (உ-ம்)

| அல்வழி | வேற்றுமை. | |
|---|---|---|
| கொக்குநெடிது | கொக்குநெடுமை | எழுஉரும். |
| குரங்குவந்தது | குரங்குவருகை | |
| நாகுஞான்றது | நாகுஞாற்சி | |
| எஃகுநீண்டது | எஃகுநீட்சி | |
| வரகுமாண்டது | வரகுமாட்சி | |
| தெள்குவலிது | தெள்குவன்மை | |

இக்குற்றியலுகரமொழிகள் வேற்றுமைப்பொருளிலே - கொக்கின்கண், வண்டின்கால், நாகினபுறம், எஃகின்சிறுமை, வரகின்மாட்சி, தெள்கின்வன்மை எனப்பெரும்பாலும் இன்சாரியைபெற்றேவருமெனவறிக.

௨௭௩ டுவ்வையும் றுவ்வையும் இறுதியிலுடைய நெடிற்றொடர் உயிர்த்தொடர் குற்றியலுகரவீற்று மொழிகளின்முன்னர் நாற்கணமும்வரின் வேற்றுமையிற்

பெரும்பாலும் உகரமேறிய டகர றகர மெய்களிரட்டும். (உ-ம்)

| | | |
|---|---|---|
| ஆட்டதர் | ஆற்றாறல் | எ-ம் |
| ஆட்டுக்கால் | ஆற்றுக்கால் | |
| ஆட்டுமயிர் | ஆற்றுமணல் | |
| ஆட்டுவால் | ஆற்றுவழி | |
| பகட்டடி | வயிற்றணி | [illegible] |
| பகட்டுக்கால் | வயிற்றுக்குடல் | |
| பகட்டுமார்பு | வயிற்றுமயிர் | |
| பகட்டுவால் | வயிற்றுவலி | |

சிறுபான்மை மலட்டுப்பசு, வரட்டாடு என அல்வழியில் இரட்டலும், வெருக்குக்கண் எருத்துமாடு என இருவழியிலும் பிறவொற்றிரட்டலும் உளவெனக் கொள்க.

௨௭௪ மென்றொடர் குற்றியலுகரவீற்று மொழிகளிலே சில நாற்கணமும் வரின் இருவழியிலும் வன்றொடர் குற்றியலுகரமாகவும் பெறும். (உ-ம்)

| | | |
|---|---|---|
| கன்று - ஆ | கற்றா | எ-ம் |
| மருந்து - பை | மருத்துப்பை | |
| கரும்பு - நாண் | கருப்புநாண் | |
| கரும்பு - வில் | கருப்புவில் | |

| | | |
|---|---|---|
| என்பு- உடம்பு | எற்புடம்பு | எ-ஆ வரும். |
| அன்பு- தளை | அற்புத்தளை | |
| குரங்கு- மனம் | குரக்குமனம் | |

அன்றியும் பண்டு காலம்-பண்டைக்காலம், இன்று நாள்-இற்றைநாள் எனமென்றொடர்க்குற்றியலுகர மொழிகள் சிறுபான்மை ஐகாரச்சாரியை இறுதியிற்பெற்று வருதலுமுளவெனக்கொள்க.

உ௬௫ திசைப்பெயர்களும் பிறபெயர்களும் வந்து புணருமிடத்துக் குற்றியலுகரவீற்றுத் திசைப்பெயர்களுட் சில கூற்றுயிர்மெய்யுங்ககரமெய்யுங் கெடவும், சில கூற்றுயிர்மெய்கெட்டுமேனின்ற றகரமெய் னகர மெய்யாகவும், லகரமெய்யாகவுந் திரியவும்பெறும். (உ-ம்)

| | | |
|---|---|---|
| வடக்கு- கிழக்கு | வடகிழக்கு | எ-ஆ வரும். |
| குணக்கு- கடல் | குணகடல் | |
| தெற்கு- மேற்கு | தென்மேற்கு | |
| மேற்கு- கடல் | மேல்கடல் | |

கிழக்கு என்பது கீழ்திசை கீழ்த்திசை கீழைத்திசை எ-ம், மேற்கு என்பது மேலைத்திசை எ-ம், விகாரப்பட்டு வருமெனவுங்கொள்க.

இத்திசைப்பெயர்கள் உம்மைத்தொகையிலே கிழக்குமேற்கு, தெற்குவடக்கு என இவ்விகாரங்களின்றியும் வருமெனவறிக.

உ௭௪. ஒன்றுமுதற் பத்தீறாகிய குற்றியலுகரவீற்றெண்ணுப்பெயர்கள் தம்முன் எண்ணுப்பெயரும் பிறபெயரும் வரின் இரண்டுபணம், மூன்றுபொருள், நான்குநாடு, ஐந்துகாசு, ஆறுசாத்திரம், ஏழாயிரம், எட்டுத்திசை, ஒன்பதுவாயில், பத்துக்காதம் என இயல்பாய் வருதலன்றி ஓராயிரம் ஒருபது எ-ம், ஈராயிரம் இருபது எ-ம், மூவாயிரம் முப்பது எ-ம், நாலாயிரம் நாற்பது எ-ம், ஐயாயிரம் ஐம்பது எ-ம், ஆறாயிரம் அறுபது எ-ம், ஏழாயிரம் எழுபது எ-ம், எண்ணாயிரம் எண்பது எ-ம், தொள்ளாயிரம் தொண்ணூறு எ-ம், பன்னிரண்டு பதினாயிரம் பதிற்றுக்கோடி எ-ம், பெரும்பாலும் விகாரப்பட்டுவரும். இவற்றுள் ஏழு என்பது முற்றியலுகரவீற்றெண்ணெனவறிக.

இவற்றுள் ஒன்றென்றுமெண்ணுப்பெயர் இயல்பாக வாராதெனவும், ஒன்பதின்முன் பத்தும் நூறும் வரின் நிலைமொழியின் இறுதி பது கெட்டு முதற்பேறுக்

தொண்ணெனவும், தொள்ளெனவுந் திரிய வருமொழியாகியபத்து நூறெனவும், நூறு ஆயிரமெனவுந் திரியுமெனவும், இவ்வெண்ணுப் பெயர்களின்முன்வரும் பத்தென்னும் எண்ணுப்பெயரினது இடையொற்றுக்கெடுமெனவும், கெட்டவிடத்து ஒருபஃதுஎனஆய்தம்வருமெனவுமறிக.

௨௱௭. ஒன்பதொழிந்த வொன்றுமுதற் பத்தூறிய வெண்ணுப்பெயர்களை இரட்டித்துச் சொல்லுமிடத்து நிலைமொழியின் முதலெழுத்தொழிய அல்லனவெல்லாங் கெட்டு முதனெடில குறுகவும், வந்தன உயிராயின் வகரவொற்றும், மெய்யாயின்வந்தவெழுத்தும், மிகவும்பெறும் (உ-ம்)

| | | |
|---|---|---|
| ஒன்று- | ஒன்று | ஒவ்வொன்று |
| இரண்டு- | இரண்டு | இவ்விரண்டு |
| மூன்று- | மூன்று | மும்மூன்று |
| நான்கு- | நான்கு | நந்நான்கு |
| ந்து- | ஐந்து | ஐவ்வைந்து |
| று- | ஆறு | அவ்வாறு |
| ழு- | ஏழு | எவ்வேழு |
| டு- | எட்டு | எவ்வெட்டு |
| த்து- | பத்து | பப்பத்து |

[ஊகாரவீறு]

உஎஅ ஊகாரவீற்றுப்பெயர்ச்சொற்களின்முன் இருவழியிலும் வரும் வல்லினமிகும். (உ-ம்)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| கொண்மூக்குறிது | கொண்மூக்குறுமை | எ-ம் |
| ஊச்சிறிது | ஊச்சிறுமை | |
| கூப்பெரிது | கூப்பெருமை | |
| ஆடூக்குறியன் | ஆடூக்கை | எ-ம், வரும் |
| மகடூச்சிறியள் | மகடூச்செவி | |

பூவென்பதன்முன் பூக்கொடி என வரும்வல்லெழுத்து மிகுதலன்றிப் பூங்கொடி என அவற்றிற்கினமெல்லெழுத்து மிகுமெனவுங்கொள்க.

உஎகூ மேற்சொல்லப்பட்ட ஊகாரவீற்று மொழிகளின்முன் வருமெல்லினமும் இடையினமும் இருவழியிலு மியல்பாம் (உ-ம்)

| அல்வழி | வேற்றுமை. | |
|---|---|---|
| கொண்மூஞான்றது | கொண்மூஞாற்சி | எ-ம் |
| ஊநீண்டது | ஊநீட்சி | |
| பூவலிது | பூவலிமை | |
| ஆடூநீன்றான் | ஆடூநிலை | |
| மகடூவலியள் | மகடூவன்மை | |

௨௮௰. எகரம் ஓரெழுத்தொருமொழியாய் வினாவிடைச்சொல்லாகவருவதன்றி வேறுமொழிகளின் இறுதியில வாராமையாலும், அவ்விடைச்சொற்கு முன்னரேவிதிகூறப்பட்டமையாலும் இங்கே அவ்வீற்றிற்கு விதிகூறவில்லை.

[ஏகாரவீறு]

௨௮௧. ஏகாரவீற்றுப்பெயர்ச்சொற்களின்முன் இருவழியிலும் வரும்வல்லினமிகும் வருமெல்லினமு மிடையினமு மியல்பாம். (உ-ம்.)

| அல்வழி | வேற்றுமை. | |
|---|---|---|
| எக்கடிது | எக்கடுமை | எ-ம். |
| சேச்சிறிது | சேச்சிறுமை | |
| தேப்பெரிது | தேப்பெருமை | |
| பேத்தீது | பேத்தீமை | |
| நேச்சிறிது | நேச்சிறுமை | |
| எஞான்றது | எஞாற்சி | எ-ம். |
| சேநீண்டது | சேநீட்சி | |
| தேவலிது | தேவன்மை | |
| பேமாண்டது | பேமாட்சி | |
| நேயாது | நேயாப்பு | |

உ௮உ. எகாரவீற்றிடைச்சொன்முன் வருமுவினமெய்களும் இயல்பாம்.

(உ-ம்)

| | |
|---|---|
| அவனேகொண்டான்<br>அவனேநின்றான்<br>அவனேவந்தான் | எனவரும். |

[ஐகாரவீறு.]

உ௮௯. ஐகாரவீற்றுச் சொற்களின்முன் வரும்வல்லினம் அல்வழியில் எழுவாய்த்தொடரிலும், வினைமுற்றுத்தொடரிலும், உம்மைத்தொகையிலும் இயல்பாம். பண்புத்தொகையிலும், உவமைத்தொகையிலும், இடைச்சொற்றொடரிலும், சிறுபான்மை பிறதொடரிலுமிகும். (உ-ம்)

| | |
|---|---|
| யானைகுறிது<br>குதிரைசிறிது<br>படைபெரியன் | எழுவாய். |
| உண்டனைகொற்றா<br>நிற்கின்றனைசாத்தா | முன்னிலைவினைமுற்று. |
| களைகொற்றா<br>அடைசாத்தா | ஏவல்வினைமுற்று. |

| | | |
|---|---|---|
| நன்மைதீமை<br>பெருமைசிறுமை | } | உம்மைத்தொகை. |
| உரிமைத்தொழில் | | பண்புத்தொகை |
| சாரைப்பாம்பு<br>சித்திரைத்திங்கள் | } | இருபெயரொட்டுப் பண்புத்தொகை. |
| தாமரைக்கண்<br>குவளைக்கண் | } | உவமைத்தொகை |
| மற்றைச்சாதி | - | இடைச்சொற்றொடர் |

எனவரும்.

௨௩௭. வேற்றுமையில் ஐகாரவீற்றுச்சொற்களின்முன்வரும்வல்லினமிகும்

உ-ம்.

| | | | |
|---|---|---|---|
| யானைக்கோடு | பூனைச்செவி | } | எனவரும் |
| சித்திரைத்திருவிழா | குவளைத்தடம் | } | |

யானைகொண்டான் எனவிரண்டனுருபுதொக வருமிடத்து வரும்வல்லினமியல்பாதலு முனவெ வகைகொள்க.

௨௩௮. மேற்சொல்லிய ஐகாரவீற்றுமொழிகளின்முன் வரு மெல்லினமும் இடையினமும் இருவழியினு மியல்பாம்.

உ-ம்.

| | | | |
|---|---|---|---|
| யானைநின்றது | யானைநிறம் | } | எனவரும் |
| குதிரைவந்தது | குதிரைவால் | | |
| உண்டனர்நாகர | ........ | | |
| தின்றனவவர | ....... | } | |

மற்றவைகளு மிப்படியே.

ஓரெழுத் தொருமொழியாகிய ஐம் முன் கைஞ்ஞான்றது, கைஞ்ஞாற்சி, கைந்நீண்டது, கைந்நீட்சி, கைம்மாண்டது, கைம்மாட்சி என மெல்லினம் இருவழியினு மிகுமெனவறிக.

[ஒகரவீறு]

உஅசு. ஒகரவீற்று ஏவல்வினை முற்றின்முன் வருமொழிவலிமெய்கள் மிகும்.

(உ-ம்.)

| | | |
|---|---|---|
| தொ கொற்றா | தொக்கொற்றா | ஏவல்தொ. |
| தொ-நாகா | தொந்நாகா | |
| தொ-வளவா | தொவ்வளவா | |

வினையாதலின் அல்வழியிலேமிக்கன

[ஓகாரவீறு]

உஅஎ. ஓகாரவீற்றுப்பெயர்களின் முன் இருவழியிலும் வரும்வல்லின மிகும். மெல்லினமு மிடையினமுமியல்பாம்.

(உ-ம்)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| ஓக்குறிது | ஓக்குறுமை | எ-ம். |
| சோச்சிறிது | சோச்சிறுமை | |
| கோப்பெரிது | கோப்பெருமை | |

ஓஞான்றது ஓஞாற்சி
சோநீண்டது சோநீட்சி } எ-ம், வரும்.
கோவலிது கோவன்மை

௨௮௮ ஓகார விடைச்சொன்முன் வருமெல்லின மெய்களுமியல்பாம். (உ-ம்)

அவனோகொண்டான்
அவனோநின்றான் } எனவரும்.
அவனோவந்தான்

[ஔகாரவீறு]

௨௮௯ ஔகார வீற்று முன்னிலைத் தொழிற்பெயரும் ஏவல்வினைமுற்றுந் தம்முன் வலிமெலியும் வகரமும் வரின் உகரச்சாரியை பெறும்; தொழிற்பெயரின் சாரியையுகரத்தின்முன்வரும் வல்லெழுத்து மிகும். (உ-ம்)

கௌவுக்கடிது கௌவுக்கடுமை
கௌவுநீண்டது கௌவுநீட்சி எ-ம்,
வெளவுவலிது வெளவுவன்மை

கௌவுகொற்றா
கௌவுநாகா } எ-ம், வரும்.
கௌவுவளவா

உயிரீற்றுப்புணரியல் முற்றிற்று.

# மெய்யீற்றுப்புணரியல்.

உகூ மெய்யீற்றின்முன் உயிர்வரி ன் வந்தவுயிர் இருவழியிலும் அம்மெய் யோடுகூடியொன்றும். (உ-ம்)

அல்வழி வேற்றுமை
ஆணழகிது ஆணழகு
வேலழகிது வேலழகு } எனவரும்.
புகழரிது புகழருமை

உகக தனிக்குற் றெழுத்தைச்சேர் ந்தமெய்கள் தம்முன்உயிர்வந்தால் இருவ ழியிலும் இரட்டிக்கும் இரட்டித்தமெய் ய்மேல் வந்தவுயிரேறும்.

(உ-ம்)

அல்வழி வேற்றுமை
மண்ணரிது மண்ணருமை
பொன்னழகிது பொன்னொளி } எனவரும்.
கல்லழகிது கல்லழகு

உகஉ யகரமல்லாதமெய்கள் தம்மு ன் யகரம்வந்தால் இருவழியிலும் இகரச் சாரியை பெறுதலுமுண்டு. (உ-ம்)

| அல்வழி | வேற்றுமை: | |
|---|---|---|
| வேளியாவன், | வேளியானை, | |
| மாலியாவன், | மாலியானை, | என வரும். |
| ஆணியார், | ஆணியாப்பு, | |

வேள்யாவன் என இன்சாரியை பெறாமல் வருதலே பெரும்பான்மையாம்.

உகரம் ஞ், ண், ந், ம், ல், வ், ள், ன், என்னும் இவ்வெட்டு மெய்யீற்று முதனிலைத் தொழிற்பெயரும் ஏவல்வினைமுற்றுந் தம்முன் யகரமெல்லாத மெய்கள்வரின் உகரச் சாரியைபெறும் தொழிற்பெயரின் சாரியை உகரத்தின்முன் வரும்வல்லினமிகும் இவ்விருமொழிகளின் சாரியையுகரத்தின்முன் வருமெல்லினமும் மிடையினமு மியல்பாம். (உ-ம்)

| அல்வழி. | வேற்றுமை: | |
|---|---|---|
| உரிஞுக்கடிது | உரிஞுக்கடுமை | |
| உண்ணுஞான்று | உண்ணுஞாற்சி | என- |
| பொருநுவலிது | பொருநுவன்மை | |

உரிஞுகொற்றா,
உண்ணுதாகா — என-ம், வரும்.
பொருநுவளவா

திரும், செல், வவ், தூள், தின் முதலியவற்றுக்கும் இவ்வாறே யொட்டிக்கொள்க.

பொருநக்கடிது என நகரவீற்றுச் சாதிப்பெயரும், வெரிநக்கடிது என நகரவீற்றுச் சினைப்பெயரும், உகரச்சாரியை பெறுமெனவுங் கொள்க.

இவ்வெட்டீற்று ஏவல்வினைகளிலே உண்கொற்றா, தின்சாத்தா, வெல்பூதா, துள்வளவா என ணனலள என்னும் பிந்நான்கீறும் உகரச்சாரியை பெறாமலு நிற்கும்.

௨௯௪. மொழிக்கிறுதியில் வரும், ஞ், ந், ண், ன், ம், ய், ர், ழ், ல், ள், வ், என்னும் பதினொரு மெய்களிலே ஞகரவீற்றுமொழி உரிஞ் என்பதொன்றும், நகரவீற்றுமொழி பொருந் வெரிந் என்பன இரண்டுமேயன்றி வேறுமொழிகளின்மையாலும், அவைகட்கு மேற்கூறிய பொதுவிதியேயன்றி வேறுவிதியின்மையாலும் அவ்விரண்டுமொழிந்து மற்றைய ஒன்பதீற்று மொழிகளுக்குஞ் சிறப்புவிதி கூறப்படும்.

[ணகரனகரவீறு.]

உகூ௫. ணகர னகரவீற்று மொழிக ளின்முன் வல்லினம்வரின் அல்வழியில் அவ்விருமெய்களும் இயல்பாம். வேற்றுமையில் ணகரம் டகரமாகவும், னகரம் றகரமாகவுந்திரியும் அவ்விருவழியிலும் வருந் தகரம் ணகரத்தின்முன் டகரமாயும், னகரத்தின்முன் றகரமாயுந்திரியும்.

(உ-ம்)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| மண்குறிது | மட்குடம் | எ-ம் |
| மண்சிறிது | மட்சாடி | |
| மண்டீது, | மட்டீண் | |
| மண்பெரிது | மட்பானை | |
| பொன்குறிது | பொற்குடம் | எ-ம், வரும். |
| பொன்சிறிது | பொற்சாடி | |
| பொன்றீது | பொற்றான் | |
| பொன்பெரிது | பொற்பானை | |

அல்வழியில் வரிற்கொள்ளும் எனச் செயினென்னும் வாய்பாட்டு வினையெச்ச

த்தினிறுதி னகரந் திரிதலும், மண்கொணர்ந்தான் பொன்கொணர்ந்தான் என இரண்டனுருபு தொகவருமிடத்தும், மண்புகுந்தும் வான்பறந்துமாலுமயனுங் காணுவொருபொருள் எனஏழனுருபுதொகவருமிடத்தும், திரியாதியல்பாதலு முளவெனக்கொள்க.

௨௯௬. ணகர னகரவீற்று மொழிகளின்முன் மெல்லினமும் இடையினமும் வரின் இறுதி ணனக்கள் இருவழியிலும் இயல்பாம். அவ்விருவழியிலும் வருநகரம் ணகரத்தின்முன் ணகரமாயும், னகரத்தின்முன் னகரமாயுந் திரியும்.

(உ-ம்.)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| மண்ஞான்றது | மண்ஞாற்சி | |
| மண்ணீண்டது | மண்ணீட்சி | |
| மண்மாண்டது | மண்மாட்சி | எ-ம். |
| மண்யாது | மண்யாப்பு | |
| மண்வலிது | மண்வன்மை | |

| | | |
|---|---|---|
| பொன்குன்றது | பொன்குற்சி | அ-ந். வே-ந். |
| பொன்னீண்டது | பொன்னீட்சி | |
| பொன்மாண்டது | பொன்மாட்சி | |
| பொன்யாது | பொன்யாப்பு | |
| பொன்வலிது | பொன்வன்மை | |

௨௨௭. தனிக்குற்றெழுத்தைச் சாராது ணகரனகரங்கள் வருநகரந்திரிந்த விடத்து இருவழியிலுங்கெடும். (உ-ம்)

| அல்வழி | வேற்றுமை. | |
|---|---|---|
| தூணன்று | தூணன்மை | எ-ம், |
| அரணன்று | அரணன்மை | |
| வானன்று | வானன்மை | எ-ம், |
| அரசனல்லன் | அரசனன்மை | வரும். |

பசுமணன்று பசுமணன்மை செம்பொன்னன்று செம்பொனன்மை எனத்தொடர்மொழியிலே குறிலின்பின்னின்ற ணனக்களும் இருவழியிலும் வருநகரந் திரிந்தவிடத்துக்கெடுமெனவுமறிக.

௨௨௮. பாண், அமண், பரண், கவண் என்னுமொழிகளின் இறுதி ணகரம் வேற்றுமையில் வல்லினம்வரின் இயல்பாம்.

(உ-ம்)

பான்குடி அமண்குடி
பரண்கால் கவண்கால் } எனவரும்

உககூ. தன் என் நின் என்னும் விகாரமொழிகளின் இறுதினகரம் வேற்றுமையிற் பெரும்பாலுந் திரியாதியல்பாம்.

(உ-ம்)

தன்கை என்செவி
நின்பகை ——— } எனவரும்.

கா குயின், ஊன், எயின், எகின், தேன், மீன், மின், பின், பன், கன் என்னு மொழிகளின் இறுதினகரம் வேற்றுமையில் வலிவரின் இயல்பாம்.

(உ-ம்)

| | |
|---|---|
| குயின்கடுமை | மின்கடுமை |
| ஊன்சிறுமை | பின்சிறுமை |
| எயின்குடி | பன்றீமை |
| எகின்கால் | கன்கடுமை |
| தேன்கடுமை | ——— |
| மீன்கண் | ——— |

எனவரும்.

இவைகளிலே எயின், எகினென்பன எயினக்குடி எகினவாழ்வு என அகரச்சாரியைபெறுதலும், தேனென்பது தேக்கு

டம் தேங்குடம் என இறுதி மகரங்கெட ஒருகால்வரும்வல்லெழுத்தும் ஒருகால் அதற்கினமெல்லெழுத்து மிகப்பெறுதலும் தேமொழி என மெல்லெழுத்து வருமிடத்து ஈறுகெடுதலும், மின், பின், பன், கன்னென்னு மிந்நான்குசொற்களும், மின்னுக்கடிது பின்னுச்சிறிது பன்னுநன்று கன்னுவலிது என யகரமல்லாத மெய்கள்வருமிடத்து உகரச்சாரியை பெறுதலும் உளவெனவுமறிக.

[மகரவீறு]

௩௱௧. மகரவீற்று மொழிகளின்முன் வல்லினம்வரின் அல்வழியில எழுவாய்த்தொடரிலும், உம்மைத்தொகையிலும், செய்யுமென்னும்பெயரெச்சத்தொடரிலும், வினைமுற்றுத்தொடரிலும், இடைச்சொற்றொடரிலும், சிறுபான்மைபிறதொடரிலு நிலைமொழியீற்றுமகரம் வரும்வல்லெழுத்திற்கினமாய்த் திரியும். பண்புத்தொகையிலும், உவமைத்தொகையிலும், இறுதி மகரங்கெடும், கெட்டவிடத்து வரும்வல்லினம் மிகும்.

(உ-ம்)

மரங்குறிது
யாங்கொடியேம் } எழுவாய்.

நலந்தீது
பணங்காசு } உம்மைத்தொகை

செய்டங்காரியம்
தின்னுஞ்சோறு } பெயரெச்சம்.

உண்டனஞ்சிறியேம்
தின்றனங்குறியேம் } வினைமுற்று.

சாத்தனுங்கொற்றனும்
பூதனுந்தேவனும் } உம்மையிடைச்சொல்.

வட்டக்கடல்
சதுரப்பலகை } பண்புத்தொகை.

கமலக்கண் உவமைத்தொகை.

எனவரும் மற்றவைகளுமிப்படியே.

மரம்பெரிது, எனப் பகரம்வருமிடத்து இறுதிமகரம் இயல்பாமெனக்கொள்க

௩௨௨. மகரவீற்று மொழிகளின்முன் வேற்றுமையிலே வல்லினம்வரின் நிலைமொழியிறுதி மகரங்கெடும். கெட்டவிடத்து வருவல்லினம் மிகும்.

(உ-ம்)

| | | |
|---|---|---|
| மரக்கோடு | மரச்செதிள் | எனவரும். |
| பழத்தோல் | நிலப்பரப்பு | |

செயங்கொண்டான், மணங்கண்டான் என இரண்டாம்வேற்றுமைத்தொகையிலிறுதிமகரங்கெடாது வரும் வல்லெழுத்திற்கினமாய்த்திரியுமெனவுங் கொள்க

௩௱௩ தனிக்குற்றெழுத்தின் கீழ்நின்ற மகரம் இருவழியிலும் வரும்வல்லினத்திற்கு இனமாகத்திரியும். (உ-ம்)

| அல்வழி | வேற்றுமை. | |
|---|---|---|
| கங்குறிது | கங்குறுமை | எனவரும். |
| அஞ்சிறிது | அஞ்சிறுமை | |
| செங்கோழி | நங்கை | |
| ———— | தஞ்செவி | |
| ———— | எந்தலை | |

௩௱௪. மகரவீற்றுமொழிகளின்முன் மெல்லினம் வரின் இறுதிமகரம் இருவழியிலுங்கெடும். (உ-ம்)

| அல்வழி | வேற்றுமை. | |
|---|---|---|
| மரஞான்றது | மரஞாற்சி | எனவரும். |
| மரநீண்டது | மரநீட்சி | |
| மரமாண்டது | மரமாட்சி | |

௩௱௨. தனிக்குறிலின்கீழ்நின்ற மகரம் ஞநக்கள்வந்தால் அவ்வெழுத்தாகத் திரியும். (உ-ம்)

அஞ்ஞானம் நஞ்ஞானம் } என
எந்நூல் தந்நூல் நந்நூல் } வரும்.

௩௱௩. மகரவீற்றுமொழிகளின்முன் உயிரும் இடையினமும் வரின் அவ்வழியில் எழுவாய்த் தொடரிலும், உம்மைத் தொகையிலும், செய்யுமென்னும் பெயரெச்சத்தொடரிலும், வினைமுற்றுத்தொடரிலும், இடைச்சொற்றொடரிலும், சிறுபான்மை பிறதொடரிலு நிலைமொழியிறுதி மகரங்கெடாமனிற்கும் பண்புத்தொகையிலும், உவமைத்தொகையிலும், இறுதிமகரங்கெடும். (உ-ம்)

மரமரிது
மரம்வலிது } எழுவாய்.

வலமிடம்
நிலம்வானம் } உம்மைத்தொகை

உண்ணுமுணவு
தின்னும்வளவன் } பெயரெச்சம்.

உண்டனமடிபேய் } வினைமுற்று.
உண்டனம்யாம் }

அரசனுமமைச்சனும் } உம்மையிடைச்சொல
புலியும்யானையும் }

வட்டவாழி } பண்புத்தொகை.
வட்டயாழ் }

பவளவிதழ் } உவமைத்தொகை
பவளவாய் } எனவரும்.

௯௱௭ மகரவீற்று மொழிகளின்முன்வேற்றுமையில் உயிரும் இடையினமும் வரின் இறுதிமகரங்கெடும். (உ-ம்)

மரவடி மரவிலை } எனவரும்.
மரயாழ் மரவேர் }

செயமடைந்தான் மரம்வெட்டினான் எனஇரண்டனுருபுதொகவருமிடத்து இறுதிமகரம் இயல்பாதலுமுளவெனக்கொள்க.

மகரவீற்றுமொழிகளின்முன் உயிர் வரின் ஒரோவிடத்து - குளம் - ஆம்பல் - குளாம்பல், மரம் - அடி - மரத்தடி எனவும் வேற்றுமையிலும், ஓணம் - அவிட்டம் ஓணவிட்

டம், கோணம் - அக்கோணம் கோணக்கோணம் என அல்வழியிலும், நிலைமொழியீறும் வருமொழிமுதலும் விகாரப்பட்டு வருதலும், ஈம் - கம் - உரும் என்னு மிம்மூன்று சொற்களும், ஈமுக்கடிது, கம்முநீண்டது, உருமுவலிது என யகரமல்லாத மெய்கள் வருமிடத்து உகரச்சாரியை பெறுதலும் உளவெனவுமறிக.

௱௮௮. ய் ர் ழ் என்னு மிம்மூன்று மெய்யீற்று மொழிகளின்முன் வரும் வல்லினம் அல்வழியில் எழுவாய்த்தொடரிலும், உம்மைத்தொகையிலும், வினைமுற்றுத்தொடரிலும், சிறுபான்மைபிற தொடரிலும் இயல்பாம். பண்புத்தொகையிலும் உவமைத்தொகையிலும், வினையெச்சத்தொடரிலுஞ் சிறுபான்மைபிற தொடரிலுமிகும்.

உ-ம்

வேய்குறிது
வேர்சிறிது } எழுவாய்.
வீழ்பெரிது

பேய்பூதம்
தார்பூ } உம்மைத்தொகை
இகழ்புகழ்

| | | |
|---|---|---|
| உண்டாய்கொற்றா<br>உண்டனிர்சாத்தரே<br>உண்டீர்பூதரே | } | முன்னிலை வினைமுற்று. |
| செய்கொற்றா<br>சேர்சாத்தா<br>வாழ்பூதா | } | ஏவல்வினைமுற்று. |
| மெய்க்கீர்த்தி<br>கார்ப்பருவம்<br>பூம்பறவை | } | பண்புத்தொகை |
| வேய்த்தோள்<br>கார்க்குழல்<br>காழ்ப்படிவம் | } | உவமைத்தொகை. |

போய்க்கொண்டான், வினையெச்சம்.

எனவரும்.

உண்ணியர்போவான் என ரகரவீற்று வினையெச்சத்தின்முன் இயல்பாமெனவும், ழகரவீறு முன்னிலைவினை முற்றிற்கும் வினையெச்சத்திற்கும் இன்றெனவு முணர்க.

ஞாகம் யர்ழ் என்னு மிம்மூன்றீற்று மொழிகளின்முன் வரும்வல்லெழுத்து வேற்றுமையிலே மிகும்.

(உ-ம்)

நாய்க்கால் தேர்த்தலை } எனவரும்.
பூழ்ச்செவி ——— }

வரும்வலிகினம் மேய்பிறந்தான், தேர்செய்தான், தமிழ்கற்றான் என இரண்டனுருபு தொகவருமிடத்தும், வாய்புகுவது எனச் சிறுபான்மை ஏழனுருபுதொகவருமிடத்தும், இயல்பாதலும், பேய்கோட்பட்டான், பேய்க்கோட்பட்டான், சூர்கோட்பட்டான், சூர்க்கோட்பட்டான் எனச் செயப்பாட்டுவினை முடிக்குஞ்சொல்லாகவருமிடத்தும், கீழ்குளம், கீழ்க்குளம், என்ற ழகரவீற்றுக் கீழ் என்பதன்முன்னும் ஒருகாலியல்பாடம் ஒருகான்மிக்கும் வருதலுமுளவெனக்கொள்க.

யரழ மேற்கூறியபயிர்ழ் என்னுமிப் மூன்றீற்று மொழிகளின்முன் வருமெலினமும், இடையினமும் இருவழியிலுமியல்பாம் (உ-ம்)

| அல்வழி | வேற்றுமை. | |
|---|---|---|
| வேய்ஞான்றது | வேய்ஞாற்சி | } |
| வேர்நீண்டது | வேர்நீட்சி | } இயல்பு |
| வீழ்யாது | வீழ்யாப்பு | } |
| உண்டாய்நாகா | ——— | } |
| உண்டீர்வளவரோ | ——— | } |

மற்றவைகளுமிப்படியே.

மெய்ஞ்ஞான்றது, மெய்ந்நீண்டது, மெய்ம்மாண்டது எ-ம், மெய்ஞ்ஞாற்சி, மெய்ந்நீட்சி, மெய்ம்மாட்சி எ-ம், தனிக்குறிற்கீழ்நின்ற யகரமெய்ம்முன் வருமெல்லின மிருவழியினு மிகுமெனவும், வேயாது, வேயாப்பு என நெடிற்கீழ்நின்ற யகரமெய் யகரம்வரின் இருவழியினுங்கெடுமெனவும், தமிழக்கோமான், தாழக்கோல் என இவ்விருமொழியும் ஒரோவிடத்து அகரச்சாரியை பெறுமெனவுங் கொள்க.

[லகரளகரவீறு]

௨௱௰௯. லகரளகரவீற்றுமொழிகளின்முன் வல்லினம்வரின் வேற்றுமையினிலைமொழியீற்று லகரம் றகரமாகவும், ளகரம் டகரமாகவுந் திரியும். அல்வழியில் இறுதி லளக்கள் ஒருகால் விகற்பமாகவும், ஒருகாற் றிரியவும் பெறும். வருந்தகரம் லகரத்தின்முன் றகரமாகியும் ளகரத்தின்முன் டகரமாகியுந் திரியும்.

(உ-ம்.)

வேற்றுமை.

கற்குடம் பாற்குடம்
கற்சாடி பாற்சாடி
கற்றூண் விரற்றீமை
கற்பானை விரற்பெருமை
கட்குடம் வாட்குறுமை
கட்சாடி வாட்சிறுமை
கட்டாழி பொருட்டீமை
கட்டானை அருட்பெருமை } எ-ம்,

அல்வழி

கல்குறிது கற்குறிது
கல்சிறிது கற்சிறிது
கல்பெரிது கற்பெரிது
முள்குறிது முட்குறிது
முள்சிறிது முட்சிறிது
முள்பெரிது முட்பெரிது } எ-ம், வரும்.

௩௱௰௨. குற்றெழுத்தின் பின்னின்ற லளக்கள் அல்வழியில் வருந் தகரந் திரிந்த விடத்து றகர டகரங்களாகத் திரிதலன்றி, ஆய்தமாகவுந் திரியும் (உ-ம்)

கற்றீது கஃறீது
முட்டீது முஃடீது } எனவரும்.

நெற்கடிது, செற்சிறிது, கொற்றீ து, சொற்பெரிது என இந்நான்கு சொற் களி னிறுதி லகரம் அவ்வழியிரு வரும்வல் லினத்தின்முன் உறழாது திரிபொன்றை யேபெறுமென்றறிக.

௩௭௩. குற்றெழுத்தையடுத்துவாராத ல ளக்கள் அல்வழியில்வருந் தகரந்திரிந்தவி டத்துக்கெடும். (உ-ம்)

வேறீது தோன்றீயன் } என
வாடீது வேடீயன் } வரும்.

மேற்கூறிய லளக்கள் சிறுபான்மை தோன்றீமை வேடீமை என வேற்றுமை யிற்கெடுதலும், காற்றீண், தாட்டீண் என அல்வழியிற்கெடாது திரிதலுமுளவெனவு மறிக.

குற்றெழுத்தையடுத்துவாராத லளக்கள் த கரமொழிந்த வல்லினம்வரின் கால்கடிது, மரங்கள்கடிய என எழுவாய்த் தொடரில், உறழாதியல்பாதலும், வேற்படை, வாட்ப டை எனப் பண்புத்தொகையிலும், வந்தக ற்செய்வோன் எனச் செயினென்னும்வாய் பாட்டுவினையெச்சத் தொடரிலும், உறழா

திரிதலும், கஃகுறித்தோடி, வாள்போழ்ந்தட்ட என மூன்றனுருபு தொகவருமிடத்தும், எனக்காப்பவளை, திரள்காப்பவன் என இரண்டனுருபு தொகவருமிடத்துந் திரியாதியல்பாதலுமுளவெனக்கொள்க.

௯௱௰௪ லகர ளகரவீற்று மொழிகளின்முன் மெல்லினம்வரின் இருவழியிலும் லகரம் னகரமாயும், ளகரம் ணகரமாயுந் திரியும் வருநகரம் லகரத்தின் முன் னகரமாயும், ளகரத்தின்முன் ணகரமாயுந்திரியும். (உ-ம்)

| அல்வழி | வேற்றுமை | |
|---|---|---|
| கல்-கன்னெரிந்தது | கன்னெரி | [illegible] |
| வில்-வின்னீண்டது | வின்னீட்சி | |
| புல்-புன்மாண்டது | புன்மாட்சி | |
| முள்-முண்ணெரிந்தது | முண்ணெரி | |
| புள்-புண்ணீண்டது | புண்ணீட்சி | |
| கள்-கண்மாண்டது | கண்மாட்சி | |

௯௱௰௫ குற்றெழுத்தைச்சாராத லளக்கள் இருவழியிலும் வருநகரந்திரிந்தவிடத்துக்கெடும். (உ-ம்)

| அல்வழி | வேற்றுமை | |
|---|---|---|
| வேணன்று | வேணன்மை | என |
| பொருணன்று | பொருணன்மை | வரும். |

கருங்கனன்று, கருங்கோணன்று எனத் தொடர்மொழியிறுதியிற்றனிக்குறிற்கீழ் நின்ற லளக்களுந் திரியுமெனவுங் கொள்க.

௩௱௰. லகர ளகரவீற்று மொழிகளின்முன் இடையினம் வரின் இருவழியிலும் இறுதி லளகள் இயல்பாம். (உ-ம்)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| கல்யாது | கல்யாப்பு | |
| விரல்வலிது | விரல்வன்மை | என |
| முள்யாது | முள்யாப்பு | வரும். |
| வாள்வலிது | வாள்வன்மை | |

இல்லென்கிற இன்மைப்பொருளையுணர்த்துஞ்சொல் ஐகார வாகாரச்சாரியைகளுளொன்றைப் பெற்றேனும், இவ்விரு சாரியைகளுளொன்றையும் பெறாமலேனும் நிற்கும் ஐகாரச்சாரியை பெற்றவிடத்து இல்லைபொருள், இல்லைப்பொருள் எனவரும் வல்லினம் ஒருகாலியல்பாயும் ஒருகால் மிக்கும் வருமெனவும் ஆகாரச்சாரியைபெற்றவிடத்து இல்லாப்பொருள் என வரும் வல்லின மிகுமெனவும், இவ்விருசாரியையும் பெறாதவிடத்து இல்பொருள் என இயல்பாமெனவுங்கொள்க.

[வகரவீறு]

ஞாயென அவ், இவ், உவ் என்னும் அஃறிணைப் பலவின்பாலைப் புணர்த்திவருஞ் சுட்டுப்பெயர்களினிறுதி வகரம் அல்வழியிலே வல்லினம்வரின் ஆய்தமாகத்திரியவும் மெல்லினம்வரின் வந்தவெழுத்தாகத் திரியவும், இடையினம்வரின் இயல்பாய்நிற்கவும்பெறும் (உ-ம்)

| | | |
|---|---|---|
| அஃகடியன | இஃசிறியன | எ-ம், |
| உஃபெரியன | ——— | |
| அஞ்ஞான்றன | இந்நீண்டன | எ-ம், |
| உம்மாண்டன | ——— | |
| அவ்யாத்தன | இவ்வளர்ந்தன | எ-ம் |
| உவ்யாழ்ந்தன | ——— | வரும். |

அன்றியுந்தெவ்வென்னுமொழியிறுதி வகரம யகரமல்லாத மெய்கள் வருமிடத்துத் தெவ்வுக்கடுந்து, தெவ்வுக்கடுமை என வுகரச்சாரியையைப்பெறுமெனவும், மகரம்வருமிடத்து ஒரோவழித்தெம்மன்னரெனமகரமாய்த்திரியப்பெறுமெனவும் அறிக.

மெய்யீற்றுப்புணரியல்

முற்றிற்று.

# பொதுப்புணரியல்.

---

௫௱௪௮ உயிரீறு மெய்யீறு மிரு வழிய வினைத்தொகைமுன் வரும் வல்லினம் இயல்பாம். (உ-ம்)

| | | |
|---|---|---|
| விரிகதிர் | எறிபடை | [illegible] |
| விரிதிணை | ஒறிபாம்பு | |
| ஈட்டுதனம் | அறைகடல் | |
| உண்கலம் | கொல்களிறு | |
| செய்கடன் | சேர்புகழ் | |
| கொள்கலம் | தின்பண்டம் | |

இவற்றின்முன் விரிமலர், கொல்யானை என வருமெல்லினமும் இடையினமு மியல்பாமெனவும், ண ன ல ள இந்நான்கிற்றின்முன்வருந் தகரமு நகரமுந் திரியுமெனவுங்கொள்க

௫௱௪௯ உயர்திணைப்பெயர் பொதுப்பெயர்களினீற்றுமெய்கள் வல்லினம் வரின் இருவழியிலும் இயல்பாம் அப்பெயர்களினீற்று உயிர்முன்னும் ய கர ரகர மெய்களின் முன்னும் வரும்வல்லினம் இருவழியிலு மிகாவாம்.

(உ-ம்)

| அல்வழி. | வேற்றுமை. | |
|---|---|---|
| அவன்குறியன் | அவன்கை | |
| ஆண்சிறியன் | ஆண்செவி | என்ம், |
| ஆண்பெரிது | ஆண்புறம் | |
| விடலைதீயன் | விடலைதலை | |
| அவர்தீயர் | அவர்தலை | |
| சாத்திகுறியள் | சாத்திகை | என்ம், |
| சாத்திபெரிது | சாத்திபுறம் | வரும் |
| தாய்தீயள் | தாய்தலை | |
| தாய்பெரிது | தாய்புறம் | |

௧௫௰ உயிரீற்று மெய்யீற்று விளிப் பெயர்முன் வரும்வல்லினம் பெருமபா லுமியல்பாம். (உ-ம்)

| | | |
|---|---|---|
| வேந்துகேள் | சாத்தாசெல் | |
| தங்காய்பார் | தாய்கா | விளி |
| புலியேகொல் | கிள்ளாய்போ | |

இவற்றின்முன் ஆடுக்கூருய், கோக்கூ ருய் என ஓரோவிடத்து வருவல்லின மி குமெனவும், வேந்துதில், தாய்வா என வரு மெல்லினமும் இடையினமும் இயல்பா மெனவுங்கொள்க.

௧௨௧ உயிரையுமெய்யையும் ஈறாகவுடைய எண்ணுப்பெயர்முன்னும் நிறைப்பெயர்முன்னும் அளவுப்பெயர்முன்னும் அவ்வவற்றிற் குறைந்த அவ்வப்பெயர்கள் வரின்பெரும்பாலும் ஏ என்னுஞ்சாரியை இடையில்வரும். (உ-ம்)

ஒன்றேகால் காலேகாணி எ-ம்,
தொடியேகஃசு கழஞ்சேகுன்றி எ-ம்,
கலனேபதக்கு உழக்கேயாழாக்கு எ-ம் } வரும்,

ஒன்றரை, தொடியரை, குறுணிநானாழி எனச்சிறுபான்மை ஏகாரச்சாரியை வாராதொழிதலும் அறிக.

நாழி என்னும் அளவுப்பெயர்முன் உரி என்னும் அளவுப்பெயர்வரின் நாடுரி, என நிலைமொழியீற்றுயிர்மெய் கெட்டு டகரமெய் தோன்றுமென்றும், உரியென்னும் அளவுப்பெயர்முன் ஏற்றமொழிகள்வரின் உரியவுப்பு, உரியபயறு என யகரவுயிர்மெய்வருமென்றுங்கொள்க.

௧௨௨. உயிரையுமெய்யையுமுதலுமீறுமாகவுடைய வேற்றுமையுருபுகள், போனவிரண்டியலுள்ளும் வேற்றுமைப் பொருட்கெனக்கூறிய மெய்யுயிர்முதலீ

ற்றுப்பெயர்களின்புணர்ச்சியைப்பெரும்பாலும் ஒத்து நிலைமொழியோடும் வருமொழியோடும் புணரும்

நம்பிகண்வாழ்வு என உயிரீற்று உயர்திணைப்பெயர்முன் வேற்றுமையில் வரும் வல்லினமிகாவென்றும், ணகரம் இடையினம்வரின் இருவழியினு மியல்பாமென்றும், விதித்தவாறு கண்ணுருபின் முதலு மீறுமியல்பாயின

உறிக்கட்டயிர், என இகர வீற்றுச்சொன்முன் வேற்றுமைப்பொருளில் வரும்வல்லின மிகுமென்றும், ணகரம் வேற்றுமைப்பொருளில் வல்லினம்வரின் டகரமாய்த்திரியுமென்றும், விதித்தவாறு கண்ணுருபின் முதலுமீறும் விகாரமாயின.

சிறுபான்மை நம்பிக்கு, என இகரவீற்று உயர்திணைப்பெயர்முன் வேற்றுமைப்பொருளில் வரும் வல்லினம் இயல்பாமென்றவாறு இயல்பாகாமற் குவ்வுருபுமிகுதலுங்கொள்க

௬௨௧ உயிரீற்று மெய்யீற்று இடைச்சொற்களும், உரிச்சொற்களும், மேற்கூறிய புணர்ச்சிவிதிக்குச் சிறுபான்மை வே

றுபட்டும்வரும். (உ-ம்)
வண்டின்கால், என வேற்றுமைப்பொ
ருட்புணர்ச்சியில் வல்லினம் வருமிடத்து
சாரியை இடைச்சொலினின்று னகரந் தி
ரியாமலியல்பாயிற்று
சென்மதிபெரும, என இகரவீற்றி
டைச்சொன்முன் வரும்வல்லெழுத்து மி
காமலியல்பாயிற்று
வரும்வல்லினம் மழகளிறு, நனிபே
தை, கழிகண்ணோட்டம், என அகர இகரவீ
ற்று உரிச்சொற்களின்முன் மிகாமல் இயல்
பாயும், தடந்தோள், என அகரவீற்றுரிச்
சொன்முன் இனமெல்லெழுத்துமிகப்பெ
ற்றும் புணர்ந்தன
கூஉச விதியின்றி விகாரப்பட்டு வ
ருவனவுஞ்சிலவுள அவை மரூஉவழங்குத
ல் ஒத்துநடத்தல், தோன்றல், திரிதல், கெ
டல், நீளல், நிலைமாறுதல், என எழுவகைப்ப
டும். மரூஉவழங்குதலொன்றும், தொடர்
மொழியிலும், மற்றவை பெரும்பாலும்
ஒருமொழியிலும்வரும்.
கூஉரு மரூஉவழங்குதல் விதியின்றி
ட்புலவாறு விகாரப்பட்டு மருவிவரும்.

(உ-ம்)

அருமருந்தன்னபிள்ளை என்பது அருமந்தபிள்ளை எ-ம், கிழங்கன்னபழஞ்சோறு எ-து, கிழங்கம்பழஞ்சோறு எ-ம், பாண்டியனாடு எ-து, பாண்டிநாடு எ-ம், தஞ்சாவூர் எ-து, தஞ்சை எ-ம், வடுகன்றந்தை எ-து, வடுகந்தை எ-ம், என்றந்தை எ-து, எந்தை எ-ம், ஆற்றூர் எ-து, ஆறை எ-ம், வடக்குள்ளது எ-து, வடாது எ-ம், வரும்.

௱௨௩ ஒத்து நடத்தல ஒரெழுத்து நின்றவிடத்து மற்றோரெழுத்து வந்து பொருள்வேறுபடாது நடத்தலாம்.

[அவைவருமாறு]

அஃறிணையியற்பெயருள் குறிலிணையின்கீழ் மகரநின்றவிடத்து னகரம்வந்து பொருள்வேறுபடா தொத்துநடக்கும்.

(உ-ம்)

அகம் - அகன், முகம், முகன் } என
நிலம் - நிலன், நலம், நலன், } வரும்.

மொழிமுதலிடைகளிலே சகர ஞகர யகரங்களின்முன் அகரநின்றவிடத்து ஐகாரம்வந்து பொருள்வேறுபடா தொத்து

நடக்கும். (உ-ம்)

பசல் - பைசல்
மஞ்சு - மைஞ்சு } எ-ம்,
மயல் - மையல்

அமச்சு - அமைச்சு
இலஞ்சி - இலைஞ்சி } எ-ம், வரும்.
அரயர் - அரையர்

ஒரோவிடத்து மொழிக்கு முதலினுஞ்சிலவிடத்து ஐகாரத்தின் பின்னும் யகரவொற்றின் பின்னும் நகர நின்றவிடத்து ஞகரம்வந்து பொருள்வேறுபடா தொத்து நடக்கும். (உ-ம்)

நண்டு - ஞண்டு
நெண்டு - ஞெண்டு } எ-ம்,
நமன் - ஞமன்

ஐந்நூறு - ஐஞ்ஞூறு } எ-ம்,
செய்ந்நின்ற - செய்ஞ்ஞின்ற } வரும்.

ஒரோவிடத்து அஃறிணைப் பெயரீற்றில் லகரமிருந்தவிடத்து ரகரம்வந்து பொருள்வேறுபடா தொத்து நடக்கும். உ-ம்.

சாம்பல் - சாம்பர்
பந்தல் - பந்தர் } எனவரும்.
குடல் - குடர்

அஃறிணைப்பெயர்களில் ஒரோவிட த்துமெய்முடர்குற்றுகரமொழிகளி னி றுதி உகரநீங்கியவிடத்து அர் வந்து பொ ருள்வேறுபடாது தொகுது நடக்கும் (உ-ம்)

அருப்பு- அருப்பர்
கருப்பு- கருப்பர்
வண்டு- வண்டர்
எனவரும்.

௱உஎ தோன்றலாவது எழுத்துஞ் சாரியையும் விதியின்றித் தோன்றுதலாம்.

(உ-ம்)

யாது-யாவது என வகர வுயிர்மெய் தோன்றிற்று குன்று-குன்றம் என அம்மு ச்சாரியை தோன்றிற்று செல்உழி செல்வுழி, வின் அது-வினவத்து என மெய்யீற் றின்முன் உயிர்வர வகரமெய்தோன்றிற்று.

௱உஅ. திரிதலாவது ஓரெழுத்து மற் றோரெழுத்தாக விதியின்றித் திரிதலாம்.

(உ-ம்)

மாகி மாசி எனக் ககரஞ் சகரமாய்த் திரிந்தது. மழைபெயின்விளையும்- மழை பெயில் விளையும் என னகரம் லகரமெய் யாய்த்திரிந்தது

௱உகூ கெடுதலாவது மெய்யாவது உ

யிராவது உயிர்மெய்யாவது விதியின்றிக் கெடுதலாம்.

(உ-ம்) யாடு-ஆடு, யானை-ஆனை என யகரமெய் கெட்டது யாவர்-யார் என வ கரவுயிர்மெய் கெட்டது.

௩௩௰ நீளலாவது விதியின்றிக் குற்றெழுத்து நெட்டெழுத்தாக நீளலாம்

(உ-ம்) பொழுது-போழ்து என ஒ கரம் ஓகார மாகவும், பெயர்-பேர் என எ கரம் ஏகாரமாகவு நீண்டன

௩௩க நிலைமாறுதலாவது எழுத்துகள் ஒன்று நின்றவிடத்தொன்றுசென்றுமாறி நிற்றலாம் (உ-ம்.)

வைகாசி-வைசாகி எ-ம், நாளிகேரம்-நாரிகேளம் எ-ம், தசை-சதை எ-ம், சிவிறு-மிஞிறு எ-ம், சிவிறி-விசிறி எ-ம், வரும்

இவையன்றி, இலக்கணப்போலிமொழிகளும் விதியின்றி விகாரப்பட்டுவரும்.

(உ-ம்) இன்முன் என்பது முன்றில் எனமாறி னகரவீற்றின்முன் விதியின்றி றகரந்தோன்றப்பெற்றது பொது-வில் என்பது பொதியில் என முற்றுகரவீற்றின் முன்விதியின்றி இகரமும் யகரமெய்யுந் தோன்றப்பெற்றது.

பொதுப்புணரியல்-முற்றிற்று.

௪. வது.

# வடவெழுத்துப்புணரியல்.

---

௩௩௨. வடவெழுத்துப் புணர்ச்சியாவது தமிழிலே ஆங்காங்கு வந்து வழங்கும் வடமொழித் தொகைநிலைத் தொடர்களிலே நிலைமொழியும் வருமொழியும் வடநூற்புணர்ச்சி விதிப்படியே தோன்றல், திரிதல், கெடுதல் என்னும் விகாரங்களைப் பொருந்தியாவது, இயல்பாகவாவது இயைந்து நிற்றலாம்.

வடவெழுத்தென்பது வடமொழியெழுத்தாம்.

வடநூலார் தோன்றலை ஆகமமென்றும், திரிதலை-ஆதேசமென்றும், கெடுதலை லோபமென்றுங் கூறுவர்.

௩௩௩. வடவெழுத்துக ளிவையென்றும், வடமொழிகள் தற்சமமாகியுந் தற்பவமாகியுந் தமிழில்வந்து வழங்குமாறு இவ்வாறென்றும், உணர்ந்தன்றி வடவெழுத்துப்புணர்ச்சி உணரலாகாமையின், அவை இவையென முன்னருணர்த்தப்படும்.

## வடவெழுத்துகளுள்

### உயிரெழுத்துகள்

அ, ஆ, இ, ஈ, உ, ஊ, ऋ, ॠ, ऌ, ॡ, ए, ऐ, ओ, औ, அம், அः, எனப்பதினாறாம்.

### மெய்யெழுத்துகள்

க, க², க³, க⁴, ங, ச, ச², ஜ, ஜ², ஞ, ட, ட², ட³, ட⁴, ண, த, த², த³, த⁴, ந, ப, ப², ப³, ப⁴, ம, ய, ர, ல, வ, ஶ, ஷ, ஸ, ஹ, ள, க்ஷ, ற, ழ, ன

எனமுப்பத்தேழாம்.

வடநூலார் உயிரை - அச்சென்றும் மெய்யை-அல்லென்றுங் கூறுவர்

ககச உயிரெழுத்துகள் பதினைந்தனுள், அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஐ, ஓ, ஔ, என்னும் பத்தும், மெய்யெழுத்துகள் முப்பத்தேழனுள், க, ங, ச, ஞ, ட, ண, த, ந, ப, ம, ய, ர, ல, வ, ள, என்னும் பதினைந்தும், ஆகிய இருபத்தைந்தும் ஆரியத்திற்குந் தமிழிற்கும் பொதுவெழுத்துகளாம்.

உயிரெழுத்துகளுள் அப்பத்தொழிந்த ஐந்தும், மெய்யெழுத்துகளுள் அப்ப

௨௱௪ வடவெழுத்துப்புணரியல்.

இனைந்தொழிந்த விருபத்திரண்டும், ஆகிய இருபத்தேழும் ஆரியத்திற்கேயுரிய சிறப் பெழுத்துகளாம்.

௯௫ ஆரியத்திற்குந் தமிழிற்கும் பொதுவெழுத்தாலாகி விகாரமுறாமல் தமிழிலவந்து வழங்கும் வடமொழிகள் - தற்சமமொழிகளெனப்படும்.

(உ-ம்.)

கமலம் காரணம் மணி } என
வேணு குங்குமம் மேரு } வரும்

௯௬. ஆரியத்திற்கேயுரிய சிறப்பெழுத்தாலும் பொதுவுஞ் சிறப்புமாகிய வெழுத்தாலுமாகித் திரிதன் முதலாகிய விகாரங்களைப்பெற்றுத் தமிழிலவந்து வழங்கும் வடமொழிகள் - தற்பவமொழிகளெனப்படும்

[அவைவருமாறு]

உயிர்களுள் மொழியிறுதி அகரம் உயர்திணையில் னகரமும், அஃறிணையில் மகரமும்பெறும் (உ-ம்) காமன் எ-ம், கும்பம் எ-ம், வரும்.

மொழியிறுதி ஆகாரம் ஐகாரமாயும் ஈகாரம் இரயாயுந்திரியும். (உ-ம்) மாலை எ-ம், புரி எ-ம், வரும்.

மொழியிறுதி ஔகாரம் உகரமாய்த் திரியும். (உ-ம்) சுயம்பு எனவரும்.

ஏழாமுயிர் இரமாயும் இருவாயுந் திரியும் (உ-ம்) இடபம் எ-ம், மிருகம் எ-ம், வரும்.

மெய்யெழுத்துகளுள் க, ச, ட, த, ப, என்னும் ஐந்துவருக்கங்களினும் இரண்டாமும் மூன்றெழுத்துகளும் அவ்வவ்வருக்கங்களின் முதலெழுத்துகளாகும். (உ-ம்)

| | | | | |
|---|---|---|---|---|
| நகம் | நாகம் | மேகம் | எ-ம், | உரும். |
| சலவாரி | விசயம் | சுருக்கலா | எ-ம், | |
| பீடம் | பீடை | திடம் | எ-ம், | |
| தலம் | தினம் | தனா | எ-ம், | |
| பலம் | பந்தம் | பாரம் | எ-ம், | |

அன்றியும் எட்டாமெய் யகரமுமாகும். (உ-ம்) பங்கயம் எனவரும்.

பதினாறுமெய்யும் பதினெட்டாமெய்யும் றகரமாகும். (உ-ம்) உற்பலம் எ-ம்,

அற்புதம் எ-ம், வரும்.

இருபதாமெய்மொழியிடையிற்பெரும்பாலுமணகரமாகும் (உ-ம்) திணம் மனம் எனவரும்

இருபத்தொன்று மெய்முதல் அவ்வருக்கத்து நான்கு மெய்களும்வகரமுமாகும். (உ-ம்)
பாவம் எ-ம், கவம் எ-ம், விந்து எ-ம், வீமன் எ-ம், வரும்

இருபத்தெட்டாமெய் றகரமாகும். (உ-ம்) கற்பகம், எனவரும்.

இருபத்தொன்பதாமெய்-ஓரோவிடத்துப் பகரமுமாகும். (உ-ம்) காப்பியம், எனவரும்

முப்பதாமெய் மொழிக்குமுதலிற் சகரமும், இடையிற் சகரமும் யகரமுமாகும் (உ-ம்) சாலை எ-ம், பாசம், மயானம் எ-ம், வரும்

முப்பத்தொன்று மெய்மொழிக்குமுதலிற்சகரமும், இடையிலுங் கடையிலும டகரமுமாகும். (உ-ம்) சண்முகம் எ-ம், விடம் எ-ம், பாடை எ-ம், வரும்.

